NEW

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

| | |
|---|---|
| දෙමළ | I |
| தமிழ் | I |
| Tamil | I |

72 T I

10.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இல் உள்ள **இரு** வினாக்களுக்கும், பகுதி **II** இல் உள்ளவற்றுள் எவையேனும் **மூன்று** வினாக்களுக்கும், எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை தருக.

## பகுதி I

**1.** மேல்வரும் செய்யுள்களை வாசித்து அவற்றின்கீழ் உள்ள வினாக்களுக்கு விடை தருக.

(அ) விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ்முளை அகைய
நெய்பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப
நும்மினுஞ் சிறந்தது நுவ்வை ஆகுமென்று
அன்னை கூறினள் புன்னையது சிறப்பே
அம்ம நாணுதும் நும்மொடு நகையே
விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப
வலம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்
துறைகெழு கொண்கநீ நல்கின்
நிறைபடு நீழல் பிறவுமா ருளவே.

(i) உணர்த்தக் கருதியதை நேரடியாகவன்றிக் குறிப்பால் உணர்த்திய தோழியின் மதிநுட்பத்தைத் துலக்குக.

(ii) இச்செய்யுளில் அமைந்துள்ள உவமையின் சிறப்பினை விளக்குக.

(iii) பின்வரும் சொற்களின் பொருளைத் தருக.
- காழ்; அகைய; விளர்; நரலும்

**(அ)**

(i) – தினமும் பகலிலே வந்து புன்னை மர நிழலிலே தலைவியைச் சந்தித்துச் செல்லும் தலைவனது வழக்கத்தைத் தடுத்து, தலைவியை விரைவில் திருமணம் செய்ய அவனைத் தூண்டுகிறாள் தோழி.

– அதனை நேரடியாகக் கூறாது, புன்னை தலைவிக்குத் தங்கை போன்றது. தங்கையின் முன்னிலையில் தலைவனைச் சந்திப்பதற்குத் தலைவி வெட்கப்படுகிறாள். இனி அந்தப் புன்னை நிழல் அல்லாது வேறு நிழல் பார்க்க வேண்டும். ஆனால்,நீ அவளைத் திருமணம் செய்வதைவிட அவளுக்கு இனிய நிழல் வேறு ஏதேனும் உண்டோ? (இல்லை) என்று குறிப்பாகக் கூறுதல்.

– வலம்புரிச் சங்கு இயல்பாகவே இனிய ஓசை எழுப்பும் துறையினை உடைய தலைவன் என்று கூறுவதன் மூலம், தலைவனால் தங்களுக்கு மகிழ்ச்சியைக் கொண்டு வர முடியும் என்பதைக் குறிப்பால் உணர்த்துதல். **(04 புள்ளிகள்)**

(ii)

- நீர்த்துறையில் வலம்புரிச் சங்கிலிருந்து எழும் ஒலிக்கு, புதிய பாணர்கள் எழுப்புகின்ற மெல்லிய இசை உவமையாகக் கூறப்பட்டுள்ளது.
- வலம்புரியிலிருந்து இயற்கையாகவே எழும் ஒலியின் இனிமை உணர்த்தப்படுகிறது.

**(04 புள்ளிகள்)**

(iii)

காழ் – விதை / கொட்டை
அகைய – முளைக்க / வளர / தளிர்க்க / தோன்ற
விளர்– மென்மை / இளமை
நரலும் – ஒலிக்கும் / கத்தும்

**(04 புள்ளிகள்)**

(ஆ) நைவீரலீர் மைந்தீ ரினித்துயரா னாடிறந்து காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவு நலமாயிற் றாமன்றே விலங்கற் றிண்டோட்
கைவீரக் களிற்றனைய காளையிவன் றன்னோடுங் கலந்து நீவிர்
ஐவீரு மொருவீரா யகலிடத்தை நெடுங்கால மளித்தி ரென்றாள்.

(i) இச்செய்யுள் இடம்பெறும் சந்தர்ப்பத்தினை விளக்குக.
(ii) இச்செய்யுளில் இடம்பெறும் உவமைகளை எடுத்துக்காட்டி விளக்குக.
(iii) குகனை எவ்வாறு கோசலை சிறப்பிக்கின்றாள் என்பதைத் தெளிவுபடுத்துக.

**(ஆ)**

(i) படகிலே கங்கையைக் கடக்கும்போது, கோசலையின் பாதத்தில் வீழ்ந்து அழுத குகனை, பரதன் அறிமுகப்படுத்தியபோது, கோசலை தேற்றும் சந்தர்ப்பம்.

**(04 புள்ளிகள்)**

(ii)

- விலங்கல் திண்தோள் – மலையை ஒத்த தோள்
  **உவமானம்** – மலை
  **உவமேயம்** – தோள்
  **பொதுத்தன்மை** – வலிமை / திரட்சி / புடைத்து நிற்றல்

- வீரக்களிறு அனைய காளை – வீரம் பொருந்திய யானையை ஒத்த காளையாகிய குகன்
  **உவமானம்** – வீரம் பொருந்திய காளை
  **உவமேயம்** – குகன்
  **பொதுத்தன்மை** – வீரம் / வலிமை

**(04 புள்ளிகள்)**

(iii)

- மலையை ஒத்த வலிய / திரண்ட தோள்களை உடையவன்.
- வீரம் பொருந்திய யானையை ஒத்த வலிமை உடையவன்
- காளைபோல் விளங்குபவன்
- தசரத குமாரர்களான இராமன் முதலானோரோடு ஒருங்குசேர்ந்து நாட்டைப் பாதுகாக்கத்தக்கவன்.

**(04 புள்ளிகள்)**

[12 + 12 = 24 **புள்ளிகள்**]

**2.** 'அ' பகுதியிலுள்ள கவிதையைப் படித்து அதன்கீழ் உள்ள வினாக்களுக்கு விடை தருக.

**அல்லது**

'ஆ' பகுதியிலுள்ள உரைப்பகுதியைப் படித்து அதன்கீழ் உள்ள வினாக்களுக்கு விடை தருக.

(அ) கானப் பறவை கலகலெனு மோசையிலும்
காற்று மரங்களிடைக் காட்டு மிசைகளிலும்,
ஆற்றுநீ ரோசை, அருவி யொலியினிலும்,
நீலப் பெருங்கடலெந் நேரமுமே தானிசைக்கும்
ஓலத் திடையே யுதிக்கு மிசையினிலும்,
மானுடப் பெண்கள் வளருமொரு காதலினால்
ஊனுருகப் பாடுவதில் ஊறிடுந்தேன் வாரியிலும்,
ஏற்றநீரப் பாட்டி னிசையினிலும், நெல்லிடிக்கும்
கோற்றொடியார் குக்குவெனக் கொஞ்சும் ஒலியினிலும்,
சுண்ண மிடிப்பார்தம் சுவைமிகுந்த பண்களிலும்,
பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும்,
வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்
கொட்டி இசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்,
வேயின் குழலோடு வீணைமுத லாமனிதர்
வாயினிலும் கையாலும் வாசிக்கும் பல்கருவி
நாட்டினிலும் காட்டினிலும் நாளெல்லாம் நன்றொலிக்கும்
பாட்டினிலும், நெஞ்சைப் பறிகொடுத்தேன் பாவியேன்.

(i) குயில் தன் நெஞ்சைப் பறிகொடுத்த, இயற்கை தரும் இசை இன்பம் பற்றி விபரிக்குக.

(ii) சாதாரண மக்களின் அன்றாட வாழ்வு இசையில் ஊறிக் கிடப்பதுபற்றி, இப்பாடல் வரிகளில் கூறப்படுபவற்றை விளக்குக.

(iii) "மானுடப் பெண்கள் வளருமொரு காதலினால்
ஊனுருகப் பாடுவதில் ஊறிடுந்தேன் வாரி"
- இவ்வரிகளில் நீர் காணும் கவிச்சிறப்பை விளக்குக.

(iv) "நெஞ்சைப் பறிகொடுத்தேன் பாவியேன்" என்ற தொடர், இசை அனுபவத்தின் உச்சவெளிப்பாடாக அமையுமாற்றை விளக்குக.

**(அ)**

(i)

- காட்டுப் பறவைகள் எழுப்பும் ஒலி,காற்று மரங்களிடை மோதி அசைப்பதனால் எழும் ஒலி, ஆற்று நீர் ஓட்டத்தினால் ஏற்படும் ஒலி, அருவி விழும்பொழுது ஏற்படும் ஒலி, கடல் அலைகள் எழுப்பும் ஒலி முதலிய இயற்கையில் இருந்து எழும் ஓசைகளில் எல்லாம் இசை இன்பத்தை அனுபவித்து அவற்றில் நெஞ்சைப் பறிகொடுத்ததாகக் குயில் கூறுகின்றது.
- நாம் சாதாரணமாகக் கவனிக்காத அல்லது பொருட்படுத்தாத இந்த இயற்கை தரும் ஓசைகளில் எல்லாம் இசை இன்பத்தை நுகரும் கவியுள்ளம் இங்கு வெளிப்படுகின்றது.

**(04 புள்ளிகள்)**

(ii) சாதாரண மக்களின் அன்றாட வாழ்வின் ஒவ்வொரு செயற்பாடும் இசையோடு பிணைந்து கிடப்பதை இப்பாடல் வரிகள் எடுத்துக்காட்டுகின்றன. பெண்கள் காதல் உணர்வினால் பாடும் பாட்டு, ஏற்றம் இறைப்பாரின் பாட்டு, நெல் இடிக்கும் பெண்கள் எழுப்பும் இசை,சுண்ணம் இடிப்பவர்களின் பாடல், பண்ணைகளில் வேலை செய்யும் பெண்களின் பலவகைப் பாடல்கள், பெண்கள் வட்டமிட்டு கை கொட்டிக் கும்மியடிக்கும்போது பாடும் பாடல் எல்லாமே நெஞ்சைப் பறிக்கும் பாடல்கள் எனக் கூறப்படுகின்றது

ஊனுருகப் பாடுவதில் ஊறிடும் தேன்வாரி, கொஞ்சும் ஒலி, சுவைமிகுந்த பண், கூட்டமுதப் பாட்டு போன்ற தொடர்கள் இவற்றின் இசை இன்பத்தை உணர்த்துகின்றன.

**(04 புள்ளிகள்)**

(iii) மானுடப் பெண்கள் பெருகிவரும் காதல் உணர்வினால் பாடும் பாடலின் தாக்கத்தையும் அது தரும் இசை இன்பத்தையும் கவித்துவச் செறிவோடு இவ்வரிகள் வெளிப்படுத்துகின்றன. 'வளருமொரு காதல், ஊனுருகப் பாடுதல், ஊறிடும் தேன் வாரி' ஆகிய தொடர்கள் கவித்துவச் செறிவு மிக்கவை.

- காதலின் வளர்ச்சியையும் எழுச்சியையும் உணர்த்தும் 'வளருமொரு காதல்' ,
- உணர்வின் ஆழத்தையும் பாட்டின் உருக்கத்தையும் உணர்த்தும் ' ஊனுருகப்பாடுதல்'
- அப்பாடல் தரும் அளப்பரிய இசை இன்பத்தை உணர்த்தும்' ஊறிடும் தேன் வாரி'

**(04 புள்ளிகள்)**

(iv) குயில், பறவைகளில் இசையின் அரசி எனப் பொதுவாகக் கருதப்படுகின்றது. அதன் கூற்றாக அமையும் 'நெஞ்சைப் பறிகொடுத்தேன் பாவியேன்' என்ற தொடர் குயிலின் இசை அனுபவத்தின் உச்சமாக அமைகின்றது எனலாம். 'நெஞ்சைப் பறிகொடுத்தல்' என்பதும் 'பாவியேன்' என்பதும் இங்கு உணர்வுச் செறிவுள்ள வார்த்தைகளாக அமைதல்.

**(04 புள்ளிகள்)**

**அல்லது**

(ஆ) எதிர்த்தாற்போல் ஒரு நாரத்தை மரம் இருந்தது. அதில் ஒரு கிளையிலிருந்து தேன்சிட்டுக்கூடு ஒன்று லோலாக்கைப்போல் தொங்கிக்கொண்டிருந்தது. சரவணமுத்துவை அறியாமலேயே கூட்டின் கட்டிடத் திறமை அவர் மனத்தை வசப்படுத்திவிட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு சிட்டு, கூட்டின் வாசலண்டை போய்க் குந்திற்று. கூட்டுக்குள் இருந்து ஒரு குஞ்சு கத்திக் கொண்டே வாசலண்டை வந்து வாயைத் திறந்தது. வந்த குஞ்சின் வாயில் எதையோ ஊட்டிவிட்டுப் பறந்துவிட்டது குருவி. அது போன சிறிது நேரத்திற்கெல்லாம் மற்றொரு குருவி வந்து அதே காரியத்தைத் திரும்பவும் செய்துவிட்டுப் பறந்து சென்றது. இதே மாதிரி மாறிமாறிப் பல தடவை நடந்தது. குருவிகளாய் இருந்தால் கவலை இல்லாமல் இருக்குமே என்று சரவணமுத்து நினைத்துக்கொண்டார்.

இப்படி நினைத்துக்கொண்டிருக்கும்பொழுதே சரவணமுத்துவின் பார்வை மற்றொரு மரத்தில் விழுந்தது. அந்த மரத்தில் விநோதமான கொடி ஒன்று படர்ந்திருந்தது. கொடியைப் பார்த்த உடனேயே பயிர்செய்யப்பட்ட கொடி என்பது விளங்கிவிட்டது. ஆனால் மலைப்பாம்பு சுற்றிக் கொள்வதுபோல் சீந்தில் கொடி ஒன்றும் அதைச் சுற்றிக்கொண்டிருந்தது.

சரவணமுத்துவுக்கு ஏதோ ஒரு விதமான கிளர்ச்சி. கொடியின் அருகில் போய்ப் பார்த்தார். குரல்வளையைப் பிடித்து நெருக்கி ஒருவரைக் கொன்றால் கழுத்தில் குறிகள் இருக்கும் என்பார்களே, அதைப் போன்ற குறிகள் பயிர்செய்யப்பட்ட கொடியில் தென்பட்டன. உலகத்தில் பிழைக்க முயலும்போது சீந்தில் கொடியைப்போல் தரித்திரமும் கூட வந்து கழுத்தை நெரிக்காமல் இருக்காதுபோல் இருக்கிறது என்ற எண்ணம் மிதந்தெழுந்தது.

(i) தேன்சிட்டுக்களின் வாழ்க்கை பற்றிய விபரணத்தின் முக்கியத்துவத்தை விளக்குக.

(ii) பயிர்செய்யப்பட்ட கொடி, சீந்தில் கொடி என்பன பற்றிய விபரணம் எதை உணர்த்தப் பயன்படுகிறது?

(iii) ஆசிரியர் பயன்படுத்தும் உவமைகளை எடுத்துக்காட்டி, அவற்றின் சிறப்பை விளக்குக.

(iv) ஆசிரியரின் உரைநடை பற்றிக் கருத்துரை வழங்குக.

**(ஆ)**

(i)

சரவணமுத்துவின் வறுமையும் நெருக்கடியும் மிக்க வாழ்க்கைக்கு மாற்றான, சுதந்திரமான,வறுமையும் நெருக்கடியுமற்ற ஒரு வாழ்க்கை பற்றிய படிமத்தை, தேன் சிட்டுக்களின் இயற்கையோடியைந்த வாழ்க்கை பற்றிய விபரணம் உணர்த்துவதாகக் கருதலாம்.

குருவிகளாய் இருந்தால் கவலை இல்லாமல் இருக்குமே என்று சரவணமுத்துவை நினைக்கத் தூண்டுவதாக இவ் விபரணம் அமைவது அதன் முக்கியத்துவத்தை விளக்கும்.

**(04 புள்ளிகள்)**

(ii)

பயிர் செய்யப்பட்ட கொடி, சீந்தில் கொடி பற்றிய விபரணம் வாழ்க்கையின் வேறு ஒரு உண்மையைப் புலப்படுத்துவதற்காகப் பயன்பட்டுள்ளது. வாழ்வும் வளர்ச்சியும் எப்போதும் இடையூறுகள் அற்றதல்ல என்பதை உணர்த்துவதற்கே ஆசிரியர் இக்காட்சியைச் சித்திரிப்பதாகக் கருதலாம். ‘பிழைக்க முயலும்போது சீந்தில் கொடியைப் போல் தரித்திரமும் கூடவந்து கழுத்தை நெரிக்காமல் இருக்காது போல் இருக்கிறது’ என்று சரவணமுத்து எண்ணுவது இதையே உணர்த்துகின்றது.

**(04 புள்ளிகள்)**

(iii)

இவ்வுரைப் பகுதியில் ஆசிரியர் மூன்று உவமைகளைக் கையாண்டுள்ளார்.

(1) லோலாக்கைப்போல

- மரக்கிளையில் தொங்கும் தேன் சிட்டுக்களின் சிறிய கூட்டை பெண்கள் காதில் அணியும் லோலாக்குக்கு ( தொங்கட்டான்) ஒப்பிடுவது இயற்கையாகவும் இலக்கியநயம் செறிந்ததாகவும் உள்ளது.

(2) மலைப்பாம்பு சுற்றிக்கொள்வதைப் போல்

- பயிர் செய்யப்பட்ட கொடியை சீந்தில் கொடி சுற்றிக்கொண்டிருப்பது மலைப்பாம்பு சுற்றிக் கொள்வது போல என்று விபரித்திருப்பது சீந்தில் கொடியின் பயங்கரத் தன்மையை எடுத்துக் காட்டுவதாக உள்ளது.

(3) கழுத்தை நெரித்துக் கொல்லப்பட்டவரின் கழுத்தில் இருக்கும் குறிகள் போல்

- சீந்தில் கொடியின் அழுத்தத்தால் பயிர் செய்யப்பட்ட கொடியில் காணப்படும் அடையாளங்களை கழுத்து நெரித்துக் கொல்லப்பட்டவனது கழுத்தில் காணப்படும் குறிக்கு ஒப்பிடுவது சீந்தில் கொடியின் பிடியின் இறுக்கத்தையும் பயங்கரத் தன்மையையும் உணர்த்தப் பயன்படுகின்றது.

மூன்று உவமைகளும் பொருட்செறிவு மிக்கனவாக, மிகையற்ற இயற்கையான சித்திரிப்புக்களாக அமைந்துள்ளன.

**(04 புள்ளிகள்)**

(iv)

- உரைநடை எளிமையானது.
- சிறுவாக்கிய அமைப்பு.
- பேச்சுவழக்குச் சொற்களின் பயன்பாடு.
  எதிர்த்தாற்போல,வாசலண்டை,லோலாக்கு
- சிக்கனமான விபரணம்
- பொருத்தமான உவமைகளின் பயன்பாடு.

**(04 புள்ளிகள்)**

[ 04 x 4 = 16 **புள்ளிகள்**]

## பகுதி II

**3.** **காலமறிதல்** என்ற அதிகாரத்தில்,

(அ) காலமறிதலின் சிறப்பும் பயனும்

(ஆ) காலம் வராவழிப் பொறுத்திருப்பதும் அவ்வாறு இருப்பதன் சிறப்பும்

(இ) எவ்வாறு காத்திருந்து, எவ்வாறு கருமத்தை முடிப்பது

என்பவை திருவள்ளுவரால் விளக்கப்படுமாற்றை எடுத்துக்காட்டுவதுடன்,

(ஈ) அவ்வதிகாரத்தில் கையாளப்பட்டுள்ள உவமைகளை அடையாளம் காட்டி அவை ஒவ்வொன்றும் கையாளப்பட்டுள்ள நோக்கத்தைத் துலக்குக.

(20 புள்ளிகள்)

**(அ)**

**காலமறிதலின் சிறப்பு**

- பகைவரை வெல்லக் கருதிய அரசர்க்கு அதற்கு ஏற்ற காலம் இன்றியமையாதது.

**காலமறிதலின் பயன்**

- ஒருவன் காலம் அறிந்து வினையாற்றுவது அவனது செல்வம் அழியாது காக்கும்.
- காலம் அறிந்து செயற்படுபவனுக்கு இயலாத காரியம் என்று எதுவும் இல்லை.
- காலமும் இடமும் அறிந்து கருமமாற்றினால் உலகம் முழுவதையும் வெல்ல முடியும்.

**(06 புள்ளிகள்)**

**(ஆ) காலம் வராவழிப் பொறுத்திருத்தலின் சிறப்பு**

- உலகத்தை வழுவாது கைப்பற்றக் கருதுபவர்கள், தம் வலிமை அதிகமாயினும் தக்க காலம் வரும் வரையில் காத்திருத்தல் வேண்டும்.
- வலிமையுடைய ஒருவன் தக்க காலம் வரும் வரையில் பொறுத்திருப்பது, பகைவரை வீழ்த்துவதற்கான வலிமையை மேலும் பெருக்குவதாகும்.

**(04 புள்ளிகள்)**

**(இ) காத்திருக்குமாறு**

- பகைவர் சீண்டியபோதும் கோபத்தை வெளிப்படுத்தாது தக்க காலம் வரும்வரையில் அடங்கி நடப்பதே அறிவுடைமை.
- பகைவரை அழிக்கத்தக்க காலம் வரும்வரையில் அவர்க்குப் பணிவதுபோலக் காட்டவேண்டும்.
- பகைவர், தம் பகையையும் வலிமையையும் முன்னரே அறிந்து தப்பாதபடி அடங்கியிருத்தல் வேண்டும்.

**கருமத்தை முடிக்குமாறு**

- பகைவரை வெல்வதற்குப் பொருத்தமான காலம் வந்தவிடத்து, உடன் செயற்படல் வேண்டும்.
- தக்க காலம் கனிந்ததும் பகைவர் தப்பிவிடாதபடி, விரைந்து தாக்க வேண்டும்.

**(04 புள்ளிகள்)**

**(ஈ)**

- காக்கையானது தன்னைவிட வலிமையுடைய கூகையை (தனக்கு வாய்ப்பான) பகற்பொழுதிலே வெல்லும். அதுபோல பகைவரை வெல்ல நினைக்கும் அரசர்க்கு (தாம் வெல்வதற்கு) பொருத்தமான காலம் ணேடும்.

  **நோக்கம்:** எடுத்த ஒரு கருமத்தை நிறைவேற்ற, அதற்குப் பொருத்தமான காலத்தைத் தேர்ந்து கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்தல்.

- வலிமை மிகுந்த ஒருவன், பகைவரைத் தாக்காது பொறுத்திருப்பது, தாக்க முயலும் ஆட்டுக்கடா பின்னே கால்வாங்குவதை ஒத்தது.

  **நோக்கம் :** காலம் வரும்வரை காத்திருப்பதன் சிறப்பை வலியுறுத்தல்.

- பொருத்தமான காலத்துக்காகக் காத்திருக்கும்போது கொக்கு காத்திருப்பது போலக் காத்திருக்க வேண்டும். காலம் வந்ததும் கொக்கு மீனைக் கொத்துவதுபோல, பகைவர் தப்பாதபடி விரைந்து தாக்க வேண்டும்.

  **நோக்கம்:** தகுந்த காலம் வரும்வரை காத்திருந்து அது வந்தவிடத்து உடன் செயற்படலை வலியுறுத்தல்.

**(06 புள்ளிகள்)**

[06 + 04 + 04 +0 6 = 20 **புள்ளிகள்**]

**4.** குகன் பரதனைக் காணச் சென்றது முதல், அவன் பரதனைக் கண்டு அவனது நிலை அறிந்து வணங்கிப் புகழ்வது வரையான பகுதியை அடிப்படையாகக் கொண்டு, பின்வருவனவற்றை விளக்குக.

(அ) சுமந்திரன் வாயிலாகக் குகனின் குணப்பண்பு

(ஆ) குகனது மனோநிலை மாற்றமும் செயற்பாடுகளும்

(இ) பரதனது துயரநிலை

(ஈ) பரதனது பெருந்தகைமை (20 புள்ளிகள்)

**(அ)**

வீரம் – நெடுந்தோள்களை உடையவன், மதங்கொண்ட ஆண் யானையினை ஒத்தவன், மலை போன்ற வலிமை உடையவன், விற்பிடித்த வேட்டுவ சேனைக் கடலையுடையவன்.

நட்பு – இராமன்மீது மிகுந்த காதல் கொண்டவன்.
கல்லையொத்த மனத்திடமுடையவனாக இருந்தபோதும் எல்லை கடந்த அன்பு மனம் கொண்டவன்.

**(04 புள்ளிகள்)**

**(ஆ)**

- பரதனைத் தூரத்தில் கண்டபோது சினந்து வீர வார்த்தைகள் பேசியவன், அண்மையில் வந்தபோது அவனுடைய தவவேடத்தையும் நடத்தைகளையும் கண்டு திடுக்கிடுதல்.
- கையிலேந்திய வில் நழுவுதல்
- பரதனின் பாதங்களில் வீழ்தல்
- 'எம்பெருமான் பின் பிறந்தார், பிழைசெய்வார்களோ' எனக் கூறுதல்.
- 'ஆயிரம் இராமர்கள் உனக்கு ஒப்பாவர்களோ' என்று பரதனைப் பார்த்துக் கூறுதல்.
- 'உனது மரபினோர் புகழையெல்லாம் உனது ஆக்கிக் கொண்டாய்' என்று குறிப்பிடுதல்.

**(06 புள்ளிகள்)**

**(இ)**

- மரவுரிக் கோலம், தூசி படிந்த மெய், ஒளியிழந்த முகம், கரைந்துருகும் துயரம்
- தவவேடம் பூண்டவன்.
  தவவேடம் மேற்கொண்டவனாகவும் அன்புடையவனாகவும் காணப்படுகின்றான். எனினும் இவன் படுகின்ற துன்பத்திற்கு ஓர் எல்லை இல்லை. (குகன் கூற்று)

**(04 புள்ளிகள்)**

**(ஈ)**

- பரதன் அரச குலத்தைச் சேர்ந்தவனாக இருந்த போதும், குகன் மனத்திற்கினிய துணைவனாக இருந்தால் அவனை நானே சென்று முதலிற் காண்பேன் என்று கூறிச் செல்லுதல்.
- கங்கை வேடனாகிய குகனைத் தன் தந்தையைத் தழுவுவதிலும் மேலான மகிழ்ச்சியுடன் தழுவிக் கொள்ளுதல்.
- உலகம் முழுவதையும் காத்த முந்தையோர் முறைனின்றும் (அரச நீதியை) தன் தந்தை வழுவியதால், அதனை நீக்க, இராமனைக் கொணரவந்தேன் எனல் / அரச நீதியை வழுவவிடாது காக்கும் நிலைப்பாடு.
- தாய் கேட்ட வரத்தால் தனக்கு வந்த அரசுரிமையைப் பரதன் தீவினை என நினைத்தமை. அதனால் பரதன் சூரிய குலத்தின் பெருமைகளைத் தனதாக்கிக் கொண்டான் என்றும், ஆயிரம் இராமர் அவனுக்கு ஒப்பாரோ என்றும் குகன் கூறுதல்.

**(06 புள்ளிகள்)**

**[04 + 06 + 04 + 06 = 20 புள்ளிகள்]**

**5.** '**ஒரு வெண்மணற் கிராமம் காத்துக்கொண்டிருக்கிறது**' என்ற நாவலில்,

(அ) ஆலங்கேணி என்ற கிராமம்

(ஆ) அக்கிராமத்து மக்களின் வாழ்க்கை முறைகள்

(இ) அக்கிராம மக்கள் அயற்கிராமங்களுடன் கொண்ட தொடர்பு

(ஈ) தலைமையாசிரியர் சின்னத்தம்பியின் அபிலாசைகள்

என்பன சித்திரிக்கப்படுமாற்றை விளக்குக. (20 புள்ளிகள்)

**(அ)**

- திருகோணமலை மாவட்டத்தில் உள்ள பின்தங்கிய, அடிப்படை வசதிகளற்ற ஒரு குக்கிராமம்.
- பெரிய ஆலமரமும் தாமரைக் கேணியும் இருந்ததால் இப்பெயர் பெற்றதென்பர்.
- கிராமம் முழுவதுமே மணற்பாங்கானது ஆனாலும் அந்த மணலிலும் மனித முயற்சி காரணமாகப் பசுமை படர்ந்து இருந்தது.
- எருமை மாடுகள் அடைக்கும் பட்டிகள், கரைச்சை வெளிகள், கண்டற்காடுகள், உப்பு வெளிகள், மணல் ஒழுங்கைகள் முதலானவற்றைக் கொண்டது.
- மரக்கறிப் பயிர் வகைகளையும் வற்றாளை முதலான கிழங்கு வகைகளையும் கொண்டதான வீட்டுத் தோட்டங்களையும் கால போகங்களில் பயிர் செய்யப்படும் வயல் வெளிகளையும் கொண்டது.

**(05 புள்ளிகள்)**

(ஆ)

- வீட்டின் அமைப்புமுறைபற்றிய சித்திரிப்பு
- வாழ்வாதாரத் தொழில்கள்
- பழக்கவழக்கங்கள் பற்றிய செய்திகள்
- சமய, பண்பாட்டு நடவடிக்கைகள்

**(05 புள்ளிகள்)**

(இ)

- தம்பலகாமம் கிராமத்துடனான உறவையும் பண்பாட்டையும் புலப்படுத்தல்
- திருவிழாவுக்குச் செல்லுதல், தங்கள் உறவினர் வீடுகளில் தங்கியிருத்தல், பதினான்காம் திருவிழாவுக்குச் சென்றவர்கள் பதினெட்டாம் திருவிழாவையும் பன்றி வேட்டைத் திருவிழாவையும் முடித்துக் கொண்டே திரும்புதல்
- தேர்தல் விவகாரங்களில் அயற் கிராமங்களோடு தொடர்பு கொள்ளுதல் (மூதூர், கிண்ணியா)
- அயற் கிராமங்களோடு தயிர் வியாபாரம் போன்ற வியாபார நடவடிக்கைகளில் ஈடுபடல்

**(05 புள்ளிகள்)**

(ஈ)

- வெறுமனே கற்பித்தலுடன் மட்டும் நின்றுவிடாது சமூக முன்னேற்றத்திலும் அக்கறை கொண்டவர்.
- கல்வி மூலமே சமூக மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும் என்றும் பெண்கள் கல்வி கற்க வேண்டும் என்றும் விரும்புபவர்
- தனது பாடசாலை மாணவர்கள் ஆசிரியர்களாகவும் டாக்டர்களாகவும் ஆக வேண்டும் என விரும்புபவர்.

**(05 புள்ளிகள்)**

[05 x 4 = 20 **புள்ளிகள்**]

**6.** அழகிரிசாமியின் **தியாகம்** என்ற சிறுகதையை அடிப்படையாகக் கொண்டு,

(அ) கதிரேசன் செட்டியார் என்ற பாத்திரப் படைப்பு

(ஆ) கதை வளர்ச்சிக்கு ஷண்முகம்பிள்ளை என்ற பாத்திரம் உதவுமாறு

(இ) ஆசிரியர் கையாண்ட எடுத்துரைப்பு முறை

ஆகியன பற்றிக் கருத்துரைக்குக.

(அ)

- சிறுகதையின் முதன்மைப் பாத்திரம்.
- கதிரேசன் செட்டியார் தன் மளிகைக்கடையில் வேலைசெய்யும் பையன்களுடன் கடுமையாக நடந்து கொள்பவர்.
- வெளிப்பார்வைக்கு கடுமையானவராக நடந்துகொண்டாலும், கடைப் பையன்கள் எதிர்காலத்தில் நல்லவராகவும் வல்லவராகவும் வரவேண்டும் என்பதில் அக்கறை கொண்டவர். (கதிரேசன் செட்டியாரின் வார்த்தைகளுக்கூடாகவும் நடத்தைகளுக்கூடாகவும் அதனை வெளிப்படுத்தல்)
- செய்யும் வேலையிலும் தனிப்பட்ட நடத்தையிலும் நேர்த்தியை வெளிப்படுத்துவர்.
- இறை நம்பிக்கை மிக்கவர்.
- பையன்கள் தொழிலில் சிறந்து துலங்க வேண்டும் என்பதற்காக தன் உடல் நலத்தையும் பொருட்படுத்தாது உழைப்பவர்.
- தன்னைப்போலவே தன் தொழிலாளரும் சிறந்து விளங்க வேண்டும் என்ற தயாள சிந்தை கொண்டவர்.

**(08 புள்ளிகள்)**

**(ஆ)**

- கதிரேசன் செட்டியாருடைய இரக்க குணத்தையும் தியாகத்தையும் தயாள சிந்தனையையும் ஆளுமையையும் வெளிப்படுத்த உதவும் துணைப்பாத்திரம்.
- கதிரேசன் செட்டியாரின் உள்ளார்ந்த மனவுணர்வை வெளிப்படுத்த உதவும் பாத்திரம்.

**(06 புள்ளிகள்)**

**( இ )**

- கதாசிரியரே கதை சொல்லியாக இருந்து கதையை வெளிப்படுத்தல்.
- விபரணப்பாங்கில் பாத்திரங்களையும் கதைக் களத்தையும் எடுத்துரைத்தல்.
- கதையில் நிகழும் உரையாடல்களில் பேச்சு வழக்குச் சொற்களைக் கையாளுதல்.
- கதிரேசன் செட்டியாரின் தியாகத்தை வெளிப்படுத்த ஷண்முகப்பிள்ளை என்ற பாத்திரத்தைக் கையாளும் உத்தி
- கதிரேசன் செட்டியாரின் நடத்தைகளை உணர்வுச் செறிவான மொழிநடையில் காட்சிப்படுத்தல்.

**(06 புள்ளிகள்)**

[08 + 06 + 06 = 20 **புள்ளிகள்**]

**7.** பேராசிரியர் அ. சீனிவாசராகவனின் **இலக்கிய விமரிசனம்** என்ற கட்டுரையை அடிப்படையாகக் கொண்டு பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

(அ) 'நக்கீர விமர்சனம்' குறித்த கட்டுரையாசிரியரின் கருத்து யாது?

(ஆ) கட்டுரையாசிரியர் கூறும் இலக்கிய விமர்சன வகைகளைக் குறிப்பிட்டு, அவை பற்றிச் சுருக்கமாக விளக்குக.

(இ) இலக்கியத்தின் இயல்பு பற்றிய கட்டுரையாசிரியரின் கருத்தைத் தெளிவுபடுத்துக.

(ஈ) இலக்கிய விமர்சனம் பற்றிய கட்டுரையாசிரியரின் கொள்கை யாது? (20 புள்ளிகள்)

**(அ)**

- நக்கீர விமர்சனம் என்பது குற்றம் காணுகிற விமரிசன முறையாகும்.
- இலக்கியத்தின் இயல்பையும் மனித அனுபவமே இலக்கியம் என்பதையும் நக்கீரர் உணரவில்லை.

**(04 புள்ளிகள்)**

**(ஆ)**

- தத்துவரீதியான இலக்கிய விமரிசனம்

  மொழியின் பண்பை அடிப்படையாகக் கொண்டது.
- சரித்திர ரீதியான இலக்கிய விமரிசனம்

  ஒரு காலத்து இலக்கியத்துக்கும் இன்னொரு காலத்து இலக்கியத்துக்கும் உள்ள தொடர்பை ஆராய்வது. காலந்தோறும் புதிய இலக்கிய வகைகள், புதிய முறைகள் தோன்றியமையை ஆராய்வது.
- வாழ்க்கைச் சரித ரீதியில் அமைந்த இலக்கிய விமரிசனம்

  ஒருவனது இலக்கியத்தை அவனது வாழ்வியல் அனுபவத்தின் அறிவைக்கொண்டு அறிதல்.
- ஒப்புமை ரீதியான இலக்கிய விமரிசனம்

  ஒரு புலவனது படைப்புக்கும் இன்னொரு புலவனது படைப்புக்கும் இடையிலான இலக்கியப் பண்புகளின் ஒற்றுமை, வேற்றுமைகளை ஆராய்தல்.

**(06 புள்ளிகள்)**

**(இ)**

- மனித அனுபவத்தைப் பேசுதல்
- காட்சிப்பொருளை காட்சிப்பொருளாக அன்றி கருத்தை எழுப்பும் கருவியாகக் காணுதல்.
- உள்ளத்தில் எழும் பல்வேறுவிதமான சிந்தனைகள், உணர்ச்சிகள், பாவனைகள் என்பனவற்றைச் சித்திரித்தல்.
- பிரபஞ்சத்தைக் கண்டு தன் மனதில் எழுந்த அனுபவத்தை சொல்லில் தேக்குவது.

**(06 புள்ளிகள்)**

**(ஈ)**

- இலக்கிய விமர்சனம் என்பது ஒரு கலை.
- இலக்கிய வளர்ச்சிக்கு இலக்கிய விமரிசனம் இன்றியமையாத சாதனம்.
- இலக்கியத்தின் பெருமையை உணருவதற்கும் அனுபவிப்பதற்கும் விமரிசனம் வழிகாட்ட வேண்டும்.
- மனதில் எழுந்த அனுபவத்தை சொல்லில் தேக்கி, தெளிவாக்கி, அதனுடைய கலையை தத்துவரீதியில் ஆராய்ந்து, கலா அனுபவத்தின் எல்லை நிலமான ஆனந்தத்துக்கு அழைத்துச் செல்லல்.

**(04 புள்ளிகள்)**

[04 + 06 + 06 + 04 = 20 **புள்ளிகள்**]

**8.** பின்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டினை** விளக்குக.

(அ) சிலப்பதிகாரம் **ஊர்காண் காதையில்** ஊழ்வினையின் வலிமை வற்புறுத்தப்படுமாறு

(ஆ) **கோயில் திருப்பதிகத்தில்**, வலிய வந்து தம்மை ஆட்கொண்ட இறைவனின் அருளை மாணிக்கவாசகர் வியக்குமாறு

(இ) தேம்பாவணி **காட்சிப்படலத்தில்** முல்லைநில இடையர்களின் உளப்பாங்கும் குழந்தை யேசுவைக் கண்டவிடத்து அவர்கள் கொண்ட குதூகலமும் உணர்த்தப்படுமாறு

(ஈ) **காரணமாலையில்** மக்க நாட்டின் அற்புதங்கள் எடுத்துரைக்கப்படுமாறு

(உ) **ஈழநாட்டுக் குறத்தில்** ஈழநாட்டின் பெருமை பேசப்படுமாறு (20 புள்ளிகள்)

**(அ)** கவுந்தியடிகள் கோவலனுக்கு கூறும் பதிலுரைகள் ஊழ்வினையின் வலிமையை வற்புறுத்துகின்றன.

- தீயவினைகள் தோன்றி துன்பத்தை விளைவிக்கும்
- பாவச்செயல்களைவிட்டு நீங்கும்படி சான்றோர் கூறிய அறவுரைகளைக் கடைப்பிடிக்காதோர் அதன்பயனாகத் துன்பம் நேரும்போது வருந்துவர்
- இல்லறத்தில் இணைந்து வாழ்ந்தவர்களும் ஊழ்வினைப் பயனுக்கு உள்ளாகியுள்ளனர்.
- இராமன் சீதையைப் பிரிந்தமை, நளன் தமயந்தியை காட்டிடைவிட்டுப் பிரிந்தமை என்பனவும் ஊழ்வினைப் பயனே ஆகும்.

**(10 புள்ளிகள்)**

**(ஆ)**

- மாறிநின்று என்னை மயக்கிடும் வஞ்சப்புலனைந்தின்வழி அடைத்தவன்
- அமுதே ஊறிநின்று என்னுள் எழு பரஞ்சோதியாய்த் திகழ்ந்தவன்
- என்பரம் அல்லா இன்னருள் தந்தவன்
- அடியேனுடைய ஆவியோடு ஆக்கை புரைபுரை கனியப் புகுந்துநின்று உருக்கிப் பொய்யிருள் கடிந்தவன்
- எனைப் பிறப்பறுக்கும் மருந்தாய்த் திகழ்ந்தவன்

- என் உடலிடம் கொண்டவன்
- பந்தம் அறுக்கும் ஆனந்த மாகடலாகத் திகழ்ந்தவன்
- என்னை ஏற்றுக் கொண்டு தன்னைத் தந்தான். அதற்கு ஒரு கைம்மாறில்லை

**(10 புள்ளிகள்)**

**(இ)**

- தேவர்களின் அழைப்பை ஏற்று எல்லோருமாக அவர் இருந்த இடத்துக்கு வந்துசேர்தல்
- யேசுபாலனின் பாதங்களில் வீழ்ந்து, மீண்டும் மீண்டும் வணங்குதல்
- முல்லைமலர் மாலைகளைக் கையில் ஏந்தி நிற்றல்
- பேரின்பம் நெஞ்சுக்குள் அடங்காமல் உயிர் ஊஞ்சலாடல்
- யேசுபாலனின் பாதங்களில் பூமாலைகளை அணிதல்
- மரியாளின் பாதங்களில் இனிய பாலைக் காணிக்கையாக வைத்தல்
- யேசுபாலனின் பார்வை பெற்று விண்ணுலக இன்பத்தை அடைவதாக உணர்தல்

**(10 புள்ளிகள்)**

**(ஈ)**

- நிலவும் சூரியனும் விலகிச் செல்லுதல்
- தினமும் வானவர் வந்து கூடுமிடம்
- பொன்னிறமான பெருமைமிக்க மலையுச்சியில் மேகம் தவழ்ந்து மழை பொழிதல்
- இறைவனுடைய அருள் குறைவிலாது கிடைத்தல்
- கஃபா எனும் இறை ஆலயம் உள்ள நகர்
- மூசா நபியின் வேண்டுதற்படி மேகம் பெருமழை பொழிந்த காரணத்தை வார்த்தைகளால் சொல்ல முடியாத மக்க நகர்
- ஆண்டுதோறும் ஆறுலட்சம் வானவர்கள் வந்து ஹஜ் எனும் வணக்கத்தை நிறைவேற்றும் நகர்.
- சம்சம் என்னும் நீரூற்றை உடைய நகர்
- ஆதம்நபி அவர்களையும் ஹவ்வா அவர்களையும் ஒன்றுசேர்த்து வைத்த இடம்

**(10 புள்ளிகள்)**

**(உ)**

- இயற்கை வளங்கள் நிறைந்த நாடு
  - கடல், மலை, நதி
  - குரங்குகள் மகிழ்ந்து விளையாடல்
  - மான்கொம்பு, பன்றி முள், மயில் தோகைகளை கொண்டு சிற்றில் செய்தல்
- புண்ணியங்கள் நிறைந்த இடம்
  - மூவர்பாடிய திருகோணமலை
  - வள்ளி குடியிருக்கும் கதிரமலை
  - புத்தபகவானது திருவடிகள் காணப்படும் மலை
  - தேவரெல்லாம் கொலுவிருக்கும் தேசம்
- செல்வ வளம்
  - கனிபெறக் காதணியை வீசுதல்
- மொழிவளம்
  - செந்தமிழும் சிங்களமும் இரு தோழியராக சேவை செய்தல்

**(10 புள்ளிகள்)**

**[10 + 10 = 20 புள்ளிகள்]**

# க.பொ.த (உயர் தர)ப் பரீட்சை - 2019
# தமிழ் II
## புள்ளி வழங்கும் திட்டம்

இவ்வினாத்தாளிற் கொடுக்கப்பட்டுள்ள எட்டு வினாக்களுள், முதலாம் பகுதியிலுள்ள முதலாம், இரண்டாம், மூன்றாம் வினாக்களுக்கும், இரண்டாம் பகுதியிலுள்ள ஐந்து வினாக்களுள் எவையேனும் இரண்டு வினாக்களுக்குமாக ஐந்து வினாக்களுக்குப் பரீட்சார்த்திகள் விடை எழுத வேண்டும்.

### பகுதி I

01. **இலக்கணம்**

$01 \times 20 = 20$ புள்ளிகள் — **20 புள்ளிகள்**

02. அ. சுருக்கம் = 13 புள்ளிகள்

ஆ. கிரகித்தல் = 12 புள்ளிகள் — **25 புள்ளிகள்**

03. கட்டுரை

பொருள் = 12 புள்ளிகள்

மொழிநடை = 08 புள்ளிகள்

அமைப்பு = 05 புள்ளிகள் — **25 புள்ளிகள்**

### பகுதி II

04. அ. 05 புள்ளிகள்

ஆ. 05 புள்ளிகள்

இ. 05 புள்ளிகள் — **15 புள்ளிகள்**

05. அ. 05 புள்ளிகள்

ஆ. 05 புள்ளிகள்

இ. 05 புள்ளிகள் — **15 புள்ளிகள்**

06. அ. 05 புள்ளிகள்

ஆ. 05 புள்ளிகள்

இ. 05 புள்ளிகள் — **15 புள்ளிகள்**

07. அ. 7 1/2 புள்ளிகள்

ஆ. 7 1/2 புள்ளிகள்

இ. 7 1/2 புள்ளிகள்

ஈ. 7 1/2 புள்ளிகள்

} **எவையேனும் இரண்டு**

**15 புள்ளிகள்**

08. அ. 10 புள்ளிகள்

ஆ. 05 புள்ளிகள்

**15 புள்ளிகள்**

NEW

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

දෙමළ II
தமிழ் II
Tamil II

72 T II

15.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

**சுட்டெண் :** ..................................

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இல் உள்ள **மூன்று** வினாக்களுக்கும் பகுதி **II** இல் உள்ளவற்றுள் எவையேனும் **இரண்டு** வினாக்களுக்கும் எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

※ பகுதி **I** இல் முதலாம் வினாவில் **இருபது** வினாக்கள் **தனியாகத்** தரப்பட்டுள்ளன. அவற்றுக்கான விடைகளை **இவ்வினாத்தாளிலேயே** எழுதி, அதனை உமது ஏனைய விடைத்தாள்களின்மேல் வைத்து இணைத்துக் கொடுக்கவும்.

## பகுதி I

**1.** **எல்லா** வினாக்களுக்கும் விடை தருக.

ஒவ்வொரு கூற்றுக்கும் கீழே ஐந்து விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் மிகப் பொருத்தமான விடையைத் தெரிந்து, அதன் இலக்கத்தை அடைப்புக்குறிக்குள் எழுதுக.

1.1 பின்வருவனவற்றுள் இதழ்குவி உயிர்
(1) ஏ (2) ஐ (3) ஒ (4) எ (5) இ (…3…)

1.2 பின்வருவனவற்றுள் வளைநா மூக்கொலி
(1) ம் (2) ன் (3) ண் (4) ஞ் (5) ங் (…3…)

1.3 பின்வருவனவற்றுள் சொல் இடையில் 'ய்' என்ற மெய்யை அடுத்து மயங்கக்கூடிய எழுத்து
(1) ட் (2) ற் (3) ர் (4) ழ் (5) ம் (…5…)

1.4 பின்வருவனவற்றுள் தோன்றல் விகாரம் இடம்பெற்றுள்ள சொல்
(1) கல்லால் (2) வாசலால் (3) கதவால் (4) காற்றால் (5) நாக்கால் (…1…)

1.5 பின்வருவனவற்றுள் குற்றியலுகரம் கெட்டுப் புணர்ந்த சொல்
(1) மருந்துக்கு (2) கருத்துக்களம் (3) வீட்டுக்காரர்
(4) பேச்சுவார்த்தை (5) வீடற்றோர் (…5…)

1.6 பின்வருவனவற்றுள் புணர்ச்சியின்போது நிலைமொழியீற்று வல்லினம் இரட்டித்துப் புணர்ந்த சொல்
(1) பாட்டுப்பாடு (2) வெட்டிப்பேச்சு (3) வீட்டுவிலங்கு
(4) காட்சிப்பிரமாணம் (5) கொட்டுமேளம் (…3…)

1.7 பின்வருவனவற்றுள் வந்தேன் என்ற சொல்லின் 'ஏன்' விகுதி உணர்த்தும் பொருள்
(1) திணையும் பாலும்
(2) இடமும் காலமும்
(3) எண்ணும் இடமும்
(4) பாலும் இடமும்
(5) காலமும் எண்ணும் (...3...)

1.8 பின்வருவனவற்றுள் படர்க்கைத் தற்சுட்டுப்பெயர்
(1) நான் (2) தான் (3) அவன் (4) அது (5) அவர் (...2...)

1.9 பின்வருவனவற்றுள் 'பல' என்பது பெயர்ச்சொல்லாக இடம்பெற்ற வாக்கியம்
(1) பலரும் எதிர்பார்த்ததுபோலவே நடந்தது.
(2) பல விடயங்கள் கவனத்திற் கொள்ளப்பட்டன.
(3) அவர் பலசரக்கு வியாபாரம் செய்கிறார்.
(4) பலவற்றையும் பற்றிப் பேசிக்கொண்டோம்.
(5) பலவாறு சிந்திக்க வேண்டியுள்ளது. (...4...)

1.10 பின்வருவனவற்றுள் கூட்டுப்பெயர்
(1) கொள்கை (2) நடுகை (3) மழைக்கை (4) இருக்கை (5) வாழ்க்கை (...3...)

1.11 பின்வருவனவற்றுள் காலம் காட்டும் தொழிற்பெயர்
(1) கொடுக்கல் (2) வாங்கல் (3) போகாமை (4) போனமை (5) வறுமை (...4...)

1.12 பின்வருவனவற்றுள் பண்புத்தொகை
(1) வருவிருந்து (2) நறுமணம் (3) உறுபகை (4) மலர்வனம் (5) செய்வினை (...2...)

1.13 பின்வருவனவற்றுள் உயர்திணைப் பலர்பாற் பெயர், எழுவாயாக அமையப்பெற்ற வாக்கியம்
(1) ஆசிரியர், சங்கக் கூட்டத்துக்குச் சென்றார்.
(2) அவர் ஆசிரியர் சங்கக் கூட்டத்துக்குச் சென்றார்.
(3) அறிஞர் எனது ஐயங்களைப் போக்கினார்.
(4) அறிஞர் கூடி முடிவெடுத்தனர்.
(5) நீ அறிஞர்களை அனுசரித்து வாழவேண்டும். (...4...)

1.14 அந்தப் புத்தகம் என் வீட்டில் உள்ளது. - இவ்வாக்கியத்தில் இடம்பெற்றுள்ள வேற்றுமைகள்
(1) உடைமை, இடம்
(2) எழுவாய், இடம்
(3) எழுவாய், உடைமை, இடம்
(4) இடம், செயப்படுபொருள்
(5) எழுவாய், இடம், செயப்படுபொருள் (...3...)

1.15 போகின்றீர்கள் என்ற சொல் தொடர்பான மிகப் பொருத்தமான இலக்கண விளக்கம்
(1) படர்க்கைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்று
(2) உயர்திணை முன்னிலைப் பன்மை வினைமுற்று
(3) உயர்திணை நிகழ்காலப் பன்மை வினைமுற்று
(4) உயர்திணை முன்னிலை நிகழ்கால வினைமுற்று
(5) முன்னிலை நிகழ்காலப் பன்மை வினைமுற்று (...5...)

1.16 பின்வருவனவற்றுள் வினையடை எது?
(1) கன்னங்கரேலென்ற
(2) எதிரும் புதிரும்
(3) அதிர்ச்சி தருகின்ற
(4) ஏட்டிக்குப் போட்டியாய்
(5) பளீரென்ற (...4...)

1.17 பின்வருவனவற்றுள் செயப்படுபொருள் குன்றிய வாக்கியம்
(1) அவன் பாடங்களைக் கவனமாகப் படித்தான்.
(2) அவன் வாகனத்தில் ஏறி விரைந்து சென்றான்.
(3) அவன் படிப்பதற்காக என்னுடைய புத்தகத்தை எடுத்தான்.
(4) நல்ல நூல்களைப் படிப்பது மனநிறைவு தருகின்றது.
(5) தூசு தட்டித் துப்பரவு செய்தார்கள். (..2..)

1.18 பின்வருவனவற்றுள் 'அல்ல' என்ற சொல்லைக்கொண்டு எதிர்மறை வாக்கியமாக மாற்ற **முடியாத** வாக்கியம்
(1) அவள் எப்போதும் நிதானமாக நடந்துகொள்பவள்.
(2) அவன் ஒரு அவசரக்குடுக்கை.
(3) அதிகாலையில் எழுந்து படிப்பது நல்லது.
(4) அவளிடம் பெறுமதியான புத்தகங்கள் உள்ளன.
(5) அவரிடம் உள்ளவை மிகப்பெறுமதியான புத்தகங்கள். (..4..)

1.19 பின்வருவனவற்றுள் கூட்டுவினை, பயனிலையாக அமையும் வாக்கியம்
(1) அப்பா நேற்று கொழும்புக்குப் போய் வந்தார்.
(2) அம்மா மாமாவை ஆஸ்பத்திரிக்குச் சென்று பார்த்தார்.
(3) நான் புத்தகத்தை மேசையில் எடுத்து வைத்தேன்.
(4) அப்போதே நான் மருந்தைக் குடித்துவிட்டேன்.
(5) அக்கா குழந்தையைத் தூக்கிக்கொண்டு சென்றாள். (..4..)

1.20 பின்வருவனவற்றுள் வினாச்சொல் இடம்பெறும் வினா வாக்கியம்
(1) தமிழ் உனக்கு விருப்பமான பாடமா?
(2) தமிழ் ஏன் உனக்கு விருப்பமான பாடம்?
(3) உனக்கு விருப்பமான பாடம் தமிழா?
(4) தமிழ் உனக்கு விருப்பமான பாடம் இல்லையா?
(5) தமிழ்ப் பாடம் உனக்கு விருப்பமானதுதானா? (..2..)

**[01 × 20 = 20 புள்ளிகள்]**

## பகுதி I

**2.** (அ) பின்வரும் உரைப்பகுதியை **50** சொற்களில் சுருக்கி எழுதுக.

தனிநாயக அடிகளார் பொதுவாக மக்கள் எண்ணுகிற மாதிரியான தமிழ்ப் பெரியார் அல்லர்.

ஆழமான அறிவின் விளைவாக, அமைதியான தோற்றத்துடன், ஆறுதலாகச் சிந்தித்துப் பேசும் அறிஞர் அவர். எந்த விஷயத்தையிட்டும் ஆழமாக ஆராய்ந்து பேசும் பண்புள்ள அறிஞர். தமிழ்மொழி அறிவு மட்டுமல்லாது, பல வளர்ச்சியடைந்த மொழிகளின் அறிவைப் பெற்றிருந்ததினால், நிதானத்துடனும் பிற பண்பாடுகளை மதித்தும் பேசும் தன்மை கொண்டிருந்தார்.

இத்தகைய பெரியார் தமிழுக்கு எத்தகைய தொண்டாற்றினார். மிகச் சுருக்கமாகச் சொல்வதானால், அடிகளார் இரண்டு முக்கிய தொண்டுகளை ஆற்றினார். அந்த இரண்டையும் பொறுத்து, அவரை விடப் பிறர் கூடுதலாகத் தொண்டாற்றியுள்ளனர் என்று கூறமுடியாது.

ஒன்று, தமிழியல் என்னும் துறை உருவாகவும் அது பற்றிய அறிவு ஆங்கிலம் வழியாகச் சர்வதேச அறிஞர்களை அடையவும் தொண்டாற்றினார். வேறொரு வார்த்தையிற் கூறுவதாயின், தமிழியலைச் சர்வதேச அறிவுத் துறையாக உயர்த்தினார். இதற்கு, முதன்முறையாக ஆங்கிலத்திலே தமிழ்ப் பண்பாடு பற்றிய சஞ்சிகையை (Tamil Culture) தொடக்கி நடத்தினார். பல நாடுகளுக்குச் சென்று தமிழ் பற்றி விரிவுரைகள் நடத்தினார். தமிழாராய்ச்சிக்கென்று உலக நிறுவனம் ஒன்றை அமைத்து, சர்வதேச மாநாடுகள் நடைபெற உதவினார். இத்தகைய தொண்டு பிறரால் ஆற்றப்படவில்லை.

இரண்டாவதாக, சர்வதேசத் தமிழர் மத்தியில் ஓர் ஒற்றுமையுணர்வை முதல் முறையாக வளர்க்க உதவினார். தமிழ்நாடு, இலங்கை, மலேஷியா ஆகிய மூன்று நாடுகளிலும் வாழ்ந்த தமிழரிடையேதான் முன்பு இத்தகைய உணர்வு காணப்பட்டது. ஆனால், தனிநாயக அடிகளார் உலகின் மூலைமுடுக்குகளில் வாழும் தமிழரைப் பற்றி ஆய்வு நடத்தி, அங்கெல்லாம் சென்று தமிழுணர்வைப் பரப்பி, உலகத் தமிழர் பற்றிய அறிவை வளர்த்து, ஓர் ஒற்றுமையுணர்வையும் ஏற்படுத்தினார். இவையே இவரை ஒரு தனித்துவமான தமிழ்ப் பெரியாராக மாற்றிவைத்துள்ளன.

(13 புள்ளிகள்)

**(அ)**

**சுருக்கம்**

- தனிநாயகம் அடிகளாரின் பன்மொழிப் புலமையும் பிற பண்பாடுகளை மதிக்கும் தன்மையும்.
- தமிழுக்கு அவர் ஆற்றிய தனித்துவம் வாய்ந்த இரண்டு வகையான தொண்டுகள்

ஒன்று: தமிழியல் துறையை சர்வதேச அறிவுத்துறையாக உயர்த்தியமை,
அதன் பொருட்டு அடிகளார் ஆற்றிய பங்களிப்பு பலவாகும்.

இரண்டு: சர்வதேச தமிழர் மத்தியில் ஒற்றுமை உணர்வை முதன்முதலாக வளர்க்க உதவியமை.
ஒற்றுமை உணர்வை ஏற்படுத்த அவர் ஆற்றிய பணிகள்.

**(08 + 05 = 13 புள்ளிகள்)**

(ஆ) பின்வரும் உரைப்பகுதியை வாசித்து, அதன்கீழே தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுதுக.

இக்காலத்து உரைநடை எல்லாருக்கும் புலப்படக்கூடியதாக அமைவதற்கு நாம் சில காரணங்கள் கூறலாம். பேச்சு வழக்கில் உள்ள சொற்கள், சொற்றொடர்கள், இலக்கண அமைதி முதலியவற்றை இக்காலத்து எழுத்தாளர்கள் பெரிதும் பயன்படுத்துதலினாலே இக்காலத்து உரைநடை மக்களுக்குத் தெளிவாகப் புலப்படுகின்றது. அது பேச்சு வழக்கோடு மிக நெருங்கிய தொடர்புடையதாக இருத்தலினாலேதான் அது பெரிதும் போற்றப்படுகின்றது. இத்தகைய நடைதான் ஓர் இயற்கை நடை எனப்படுகின்றது. அங்ஙனம் பேச்சு வழக்கோடு தொடர்பில்லாத ஒரு நடை இயற்கை நடையாகாது. முற்காலங்களிற் கையாளப்பட்ட நடை வகைகளுட் சில, செயற்கைப் பண்பு வாய்ந்தனவாக இருத்தலை நாம் முந்திய அதிகாரங்களுட் கண்டோம். பெயரெச்ச வினையெச்சங்களை அமைத்து வாக்கியங்களை மிக நீட்டி எழுதுவது முற்கால வழக்காறாக இருந்தது. இக்காலத்தில் அம்மரபு கைவிடப்பட்டு வருகின்றது. பொருளைச் சிறுசிறு வாக்கியங்களிலே தெளிவாக அமைத்து எழுதும் முறையைச் சிறந்த எழுத்தாளர்கள் கையாண்டமையால், அந்நடைவகை இக்காலத்திற் பெருவழக்காகிவிட்டது. பொதுமக்கள் விரும்பிப் படித்தற்கு உரிய நடை சிறுசிறு வாக்கியங்களாக அமையும் நடையே. அத்தகைய நடை இக்காலத்தில் தேவைப்பட்டமையால் அத்தேவைக்கு ஏற்ப அந்நடைவகை இக்காலத்தவராற் பெரிதுங் கையாளப்பட்டு வருகின்றது. இந்நடை பல்வகைப் பொருள்களையும் தெளிவாக எடுத்துக்காட்டத்தக்க ஆற்றலுடையதாக அமைந்திருத்தல் நோக்கற்பாலது. இத்தகைய ஆற்றல் வாய்ந்த இந்நடையினை இலக்கண வழுக்கள் மலியப் பெற்றதொன்று எனக் கருதுவாரும் உளர். தொல்காப்பியர் கூறிய விதிகளுக்கு அமைய எழுதும் முறை இக்காலத்திற் கைவிடப்படுகின்றதே என்று வருந்துவாரும் பலருளர். வழக்கிலுள்ள மொழி எதுவாயினும் அதன் இலக்கண மரபு காலத்திற்குக் காலம் மாற்றமடைந்து செல்லும் இயல்பினது. இந்நூற்றாண்டிலே பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் உள்ள தமிழ்மொழி, இலக்கண அமைதியிலே முற்காலத்துத் தமிழிற் பெரிதும் வேறுபட்டிருத்தலில் வியப்பொன்றுமில்லை. இக்காலத்து வழக்கிலுள்ள மொழிக்கு இலக்கணம் எழுதப்படாமையான் அதற்கு இலக்கணம் தொல்காப்பியமும் நன்னூலும் என்று எண்ணி, அந்நூல்களிற் கூறப்பட்டுள்ள விதிகளுக்கு அமையாத இக்கால வழக்குக்களையெல்லாம் பிழையெனக் கருதுகின்றோம். வளரும் மொழிகளின் இயல்பை நாம் அறிந்துக்கொள்ளாமையே இதற்குக் காரணமாகும்.

(i) இக்கால உரைநடை மக்களுக்கு இலகுவாகப் புரிவதற்கு ஆசிரியர் கூறும் காரணம் யாது?
(ii) முற்கால உரைநடைக்கும் இக்கால உரைநடைக்கும் இடையே ஆசிரியர் கூறும் வேறுபாடு யாது?
(iii) ஆசிரியரின் கருத்துப்படி பொதுமக்கள் விரும்பிப் படிப்பதற்கு உரிய உரைநடை எத்தகையது?
(iv) இக்கால வழக்குகளையெல்லாம் நாம் பிழை எனக் கருதுவதற்கு ஆசிரியர் கூறும் காரணம் யாது?
(v) இயற்கை நடை, செயற்கை நடை என ஆசிரியர் எவற்றைக் கூறுகிறார்?
(vi) வளரும் மொழிகளின் இயல்பு பற்றிய ஆசிரியரின் கருத்து யாது?

**(ஆ)**

(i) **இக்கால உரைநடை பெரிதும் பேச்சுவழக்கை ஒட்டி அமைந்திருப்பது.**

(ii) **முற்கால உரைநடை நீண்ட வாக்கியங்களைக் கொண்டது. இக்கால உரைநடை பெரிதும் சிறுசிறு வாக்கியங்களைக் கொண்டது.**

(iii) **சிறுசிறு வாக்கியங்களைக் கொண்ட உரைநடையே பொதுமக்கள் விரும்பிப் படிப்பதற்கு உரியது என்பது ஆசிரியரின் கருத்து.**

(iv) இக்கால வழக்கில் உள்ள மொழிக்கு இலக்கணம் எழுதப்படாமை, இக்காலத் தமிழுக்கும் உரிய இலக்கணம் தொல்காப்பியமும் நன்னூலுமே எனக் கருதுதல், அந்நூல்களில் கூறப்பட்டுள்ள விதிகளுக்கு அமையாத இக்கால வழக்குகளை பிழை எனக் கருதுதல்.

(v) பேச்சுவழக்கோடு நெருங்கிய தொடர்புடைய, எளிதில் பொருள் விளங்கும் நடை இயற்கை நடை. பேச்சுவழக்கோடு தொடர்பில்லாத நடை செயற்கை நடை.

(vi) வளரும் மொழிகள் எல்லாம் இலக்கண அமைப்பில் காலத்துக்குக் காலம் மாற்றம் அடையும் இயல்புடையன.

**(02 x 6 = 12 புள்ளிகள்)**
[13 + 12 = 25 **புள்ளிகள்**]

**3.** பின்வருவனவற்றுள் யாதேனும் **ஒரு** தலைப்பைத் தெரிந்து **300 - 350** சொற்கள் கொண்ட கட்டுரை எழுதுக.

(அ) மொழியாற்றலை வளர்த்தல்

(ஆ) வாசிப்பும் அறிவு வளர்ச்சியும்

(இ) பாடசாலைக் கல்வியும் பிரத்தியேக வகுப்புகளும்

(ஈ) போதைப்பொருள் வியாபாரமும் அதன் விபரீதமும்

(உ) 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்!' (25 புள்ளிகள்)

**(அ) மொழியாற்றலை வளர்த்தல்**

- மொழியாற்றல் என்றால் என்ன?
- நவீன உலகில் மொழியாற்றலின் முக்கியத்துவம்
- மொழியாற்றலை வளர்க்கும் வழிமுறைகள்
- இலக்கிய, இலக்கணக் கல்வி
- பரந்துபட்ட வாசிப்பு
- தொடர்ச்சியான எழுத்துப் பயிற்சி
- அச்சு ஊடகங்களைப் பயன்படுத்துதல்
- ஏனைய தொடர்புச் சாதனங்களின் பயன்பாடு

**(ஆ) வாசிப்பும் அறிவு வளர்ச்சியும்**

- அறிவு விருத்திக்கு வாசிப்பின் இன்றியமையாமை
- வாசிப்பின் நன்மைகள் : அறிவுவிருத்தி, ஆளுமைவிருத்தி, உளவிருத்தி, மகிழ்ச்சி, கிரகித்தல் முதலியன.
- வாசிப்பை மேம்படுத்துவதற்கான வழிமுறைகள் நூலகப் பயன்பாடு, புத்தகக் கண்காட்சி, வாசிப்பை ஊக்குவித்தல், பரிசில் வழங்குதல் முதலியன.

**(இ) பாடசாலைக் கல்வியும் பிரத்தியேக வகுப்புகளும்**

- பாடசாலைக் கல்வி – பிரத்தியேக வகுப்பு
- கல்வி இன்று பரீட்சையை மையப்படுத்தியதாகக் காணப்படுதல்
- அதனால் பிரத்தியேக கல்வி நிறுவனங்கள் வளர்ச்சியடைதல்

பாடசாலைக் கல்வியின் நோக்கம்:

- கல்வியின் களமாக பாடசாலை அமைதல்
- கற்பித்தலுடன் மாணவனை சமூகப் பொருத்தப்பாடு உடையவனாக்குதல்
- மாணவனின் முழுமையான ஆளுமைவிருத்திக்கு உதவுதல்

பிரத்தியேக வகுப்புக்களினால் ஏற்படும் குறைபாடுகள்:

- இணைப்பாடவிதான செயற்பாடுகள் குறைதல்
- இலவசக் கல்விமுறையைக் கேள்விக்குள்ளாக்குதல்
- மாணவர்களின் சுய கற்றல் பாதிப்புக்குள்ளாகுதல்
- சுயசிந்தனைகளுக்கான சூழல் காணப்படாமை

பாடசாலைக் கல்வி மேம்பாடு:

- கல்விச் சீர்திருத்தங்களினூடாக பாடசாலையின் கற்பித்தல் சூழலை மேம்படுத்தல்
- ஆசிரியர் வாண்மை விருத்திச் செயற்பாடுகளை முன்னெடுத்தல்

**(ஈ) போதைப்பொருள் வியாபாரமும் அதன் விபரீதமும்**

- போதைப்பொருள் வியாபாரம் இன்றைய உலகம் எதிர்கொள்ளும் முக்கிய பிரச்சினை
- சட்டவிரோதமான போதைப்பொருள் வியாபாரம்
- சட்டவிரோத போதைப்பொருள் உற்பத்தியும் விநியோகமும் வருமானமும்
- போதைப்பொருள் நுகர்வும் இளந்தலைமுறையினரும்
- போதைப்பொருள் வியாபாரத்தின் விபரீதம்
- போதைப்பொருள் வீட்டுக்கும் நாட்டுக்கும் கேடு

  தேக ஆரோக்கியத்துக்கும் சமாதான வாழ்வுக்கும் குந்தகம் விளைவித்தல்
- மாணவர் மத்தியில் கல்வியில் நாட்டமின்மை.
- பண்பற்ற சமுதாய உருவாக்கம்

**(உ) ‘உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்!’**

- விவசாயம், கைத்தொழில் இரண்டினது முக்கியத்துவம்
- உழவுத் தொழிலின் முக்கியத்துவமும் அதன் சிறப்பும்
- உழைப்பு, உழைப்பாளியின் முக்கியத்துவம்
- கைத்தொழில்களின் முக்கியத்துவம்
- உழவும் கைத்தொழிலும் பொருளாதார, சமூக வளர்ச்சியின் அடிப்படையாக அமைதல்
- உழவையும் தொழிலையும் மேம்படுத்துவதற்கான வழிமுறைகள்

[12 + 08 + 05 = 25 **புள்ளிகள்**]

## பகுதி II

**4.** (அ) சங்கமருவிய காலத்தில் எழுந்த நூல்களைப் பொருளடிப்படையில் வகைப்படுத்துக.

(ஆ) தமிழிலக்கிய வரலாற்றில் சங்கமருவிய காலத்தை இருண்டகாலம் எனக் கொள்வது பொருந்துமோ என ஆராய்க.

(இ) தமிழிலக்கிய வரலாற்றில் காரைக்காலம்மையார் பெறும் முக்கியத்துவத்தை விளக்குக.

(15 புள்ளிகள்)

**(அ)** பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்

**அற நூல்கள்**

| | | |
|---|---|---|
| திருக்குறள் | நாலடியார் | நான்மணிக்கடிகை |
| இன்னா நாற்பது | இனியவை நாற்பது | திரிகடுகம் |
| ஆசாரக் கோவை | பழமொழி நானூறு | சிறுபஞ்சமூலம் |
| முதுமொழிக்காஞ்சி | ஏலாதி | |

**அகத்திணை நூல்கள்**

| | |
|---|---|
| கார்நாற்பது | ஐந்திணை ஐம்பது |
| ஐந்திணை எழுபது | திணைமொழி ஐம்பது |
| திணைமாலை நூற்றைம்பது | கைந்நிலை |

**புறத்திணை நூல்**

களவழி நாற்பது

**காப்பியங்கள்**

சிலப்பதிகாரம்

மணிமேகலை

**பக்தி அலக்கியங்கள்**

| | |
|---|---|
| அற்புதத் திருவந்தாதி | திருவிரட்டை மணிமாலை |
| திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் | திருவாலங்காட்டுத் திருப்பதிகம் |
| முதலாழ்வார் பாசுரங்கள் | |

**(05 புள்ளிகள்)**

**( ஆ )**

அரசியல் நிலையை அடிப்படையாகக் கொண்டு சங்கமருவிய காலத்தை இருண்ட காலம் என்பர். எனினும் இலக்கிய வரலாற்றைப் பொறுத்த வரையில் சங்கமருவிய காலத்தை இருண்ட காலம் என்பது பொருத்தமற்றது. ஏனெனில்

- தமிழில் தலைசிறந்த அறநூலாகிய திருக்குறள் உள்ளிட்ட பதினொரு அற இலக்கியங்கள்
- சிறந்த காவியங்கள் : சிலப்பதிகாரம்,மணிமேகலை
- பக்தி இலக்கியங்களின் தோற்றுவாயாக அமையும் காரைக்காலம்மையார் பாடல்கள், முதலாழ்வார் பிரபந்தங்கள்
- தமிழிலக்கண மரபின் முன்னோடி நூலாகவிளங்கும் தொல்காப்பியம் முதலான தலைசிறந்த நூல்கள் தோன்றியது இக்காலத்திலேயே ஆகும்.

**(05 புள்ளிகள்)**

**(இ)**

- சங்கமருவிய காலத்திலே காரைக்காலம்மையாரால் தொடக்கி வைக்கப்பட்ட சைவபக்தி நெறியே பல்லவர் காலத்தில் நாயன்மார்களால் முன்னெடுக்கப்பட்டது.
- அற்புதத்திருவந்தாதி, திருவிரட்டைமணிமாலை, திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம், திருவாலங்காட்டு திருப்பதிகம் ஆகிய பக்தி இலக்கியங்களைப் படைத்தார்.
- இறைவனது திருவுருவம், அவனது அருட்டிறம், தலச்சிறப்பு முதலானவற்றைப் பாடும் மரபைத் தோற்றுவித்தமை
- தமிழிலக்கிய வரலாற்றிலே முதன்முதலாக பதிகம், அந்தாதி முதலானவற்றைப் பாடும் மரபைத் தொடக்கிவைத்தமை (திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம்,அற்புதத் திருவந்தாதி)
- விருத்தம்,கட்டளைக் கலித்துறை ஆகிய யாப்புக்களை அறிமுகம் செய்தமை
- முத்திரைக் கவிபாடும் மரபைத் தொடக்கிவைத்தமை

**(05 புள்ளிகள்)**

[05 x 3 = 15 **புள்ளிகள்**]

**5.** (அ) பக்தி இயக்கத்தைப் பொது மக்களின் மத்தியில் கொண்டு செல்வதற்கு நாயன்மார்களும் ஆழ்வார்களும் கையாண்ட வழிமுறைகளை விளக்குக.

(ஆ) பல்லவர் காலத்தில் எழுந்த சமயம்சாரா இலக்கியங்கள் குறித்துக் கருத்துரைக்குக.

(இ) பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தத்தின் அடிப்படைகள், அக்காலப் பக்தியிலக்கியங்களிற் காணப்படுமாற்றை விளக்குக.

(15 புள்ளிகள்)

**(அ)**

- பக்திநெறியாளர்கள் ஒன்றிணைந்து இயங்குதல்
- தலயாத்திரைகளை மேற்கொண்டு தேவாரங்களையும் பாசுரங்களையும் பாடுதல்
- சமூகத்தில் உள்ள பல தரப்பினரையும் ஒன்றிணைத்தமை
- இசைப்பண்பு வாய்ந்த எளிய மொழிநடையில் பாடல்களைப் பாடியமை
- புராண இதிகாசச் செய்திகளை, நாட்டார் மரபுகளைப் பாடல்களில் புகுத்துதல்
- அற்புதசம்பவங்கள் ஊடாக மக்களிடையே பக்தியை ஏற்படுத்தியமை
- கடவுளின் தோற்றப் பொலிவு, அருட்டிறம், வல்லமை என்பவற்றை வெளிப்படுத்திப் பாடியமை

**(05 புள்ளிகள்)**

**(ஆ)**

முத்தொள்ளாயிரம்

- சேர,சோழ,பாண்டியர் என்னும் மூவேந்தர் பற்றித் தொள்ளாயிரம் பாடல்களைக் கொண்டு விளங்கும் அகம், புறம் சார்ந்த நூல்.
- அரசரது வீரமும் புகழும் அவர்கள்மீது பெண்கள் கொண்ட காதலும் பாடப்பட்டுள்ளது.

நந்திக்கலம்பகம்

- கலம்பகங்களுக்கெல்லாம் காலத்தால் முந்தியதும் பிற்காலத்தில் எழுந்த கலம்பகங்களுக்கு வழிகாட்டியாய் அமைந்ததும் எண்வகைச் சுவையும் ஒருங்கு தோன்றுவதுமான அகம், புறம் சார்ந்த நூல்.
- தெள்ளாறு எறிந்த நந்திவர்மனுடைய புகழை இவ்விலக்கியம் குறிப்பிடுகின்றது.

- கொங்குவேளிர் மாக்கதை அல்லது உதயணன் கதை என்ற வேறு பெயர்களையுடைய பெருங்கதையும், மற்றும் பாண்டிக்கோவை என்ற இலக்கியமும் இக்காலத்துக்குரியன.
- உரைநடை இலக்கியங்கள்:
  ஸ்ரீபுராணம், கயசிந்தாமணி, இறையனார் களவியலுரை என்பன இக்காலத்தில் எழுந்துள்ளன. இவை பெரும்பாலும் மணிப்பிரவாள நடையில் அமைந்துள்ளன.

**(05 புள்ளிகள்)**

**(இ)**

பெரியாழ்வார் திருமொழி

- பெரியாழ்வார் கண்ணன்மீது கொண்ட பற்றினால், ஆயர்பாடி யசோதையாகத் தன்னைப் பாவனை செய்தமை
- கண்ணனுடைய குழந்தைப் பருவ லீலைகளை அனுபவித்துப் பாடியமை
- அவை பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தத்தினுடைய அடிப்படையாக அமைந்தமை
- குலசேகர ஆழ்வாருடைய பாசுரங்களிலும் பிள்ளைத்தமிழ்க் கூறுகள் அமைந்துள்ளமை

**(05 புள்ளிகள்)**

[05 x 3 = 15 **புள்ளிகள்**]

**6.** பத்தொன்பதாம் நூற்றாண்டில்,
(அ) அகராதி
(ஆ) நூற்பதிப்பு
(இ) பத்திரிகை
ஆகிய துறைகளில் ஈழத்தவர் ஆற்றிய பணிகளை விளக்குக. (15 புள்ளிகள்)

**(அ)**

**அகராதி**

- பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஈழத்தில் இடம்பெற்றுள்ள முக்கியமான அகராதி முயற்சிகள்
- அகராதி ஆக்கக்குழு : மேலைத்தேய சுதேசிய அறிஞர்களின் கூட்டுமுயற்சி
- பன்முக அகராதி முயற்சிகள் (தமிழ் – தமிழ், தமிழ் – ஆங்கிலம்,ஆங்கிலம் – தமிழ்)
- அகராதி முயற்சிகளில் ஈடுபட்ட முக்கியமான அறிஞர்கள் :
  வை. கதிரைவேற்பிள்ளை,ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை, நா. கதிரைவேற்பிள்ளை, சந்திரசேகரபண்டிதர்
- முக்கியமான அகராதிகள் :
  யாழ்ப்பாணஅகராதி / மானிப்பாய் அகராதி, தமிழ்ப் பேரகராதி, அபிதானகோசம்,சொற்பிறப்பு ஒப்பியல் அகராதி,சொற்பொருள் விளக்க அகராதி

**(05 புள்ளிகள்)**

**(ஆ)**

**நூற்பதிப்பு**

- அச்சியந்திரத்தின் சுதேசியமயப்பாடும் சுதேசியர்களின் பதிப்பு முயற்சிகளும்
- தமிழ்நூற்பதிப்பிலும் பேணுகையிலும் ஈழத்தவர்களே முன்னோடிகளாகவும் வழிகாட்டிகளாகவும் அமைந்தனர்
- பழந்தமிழ் நூல்களைப் பதிப்பித்தல்
- ஆறுமுகநாவலர் : சுத்தப்பதிப்பு
  பதிப்பித்த நூல்கள் : சமயநூல்கள் – திருமுருகாற்றுப்படை,சேதுபுராணம், பெரியபுராணம்
  இலக்கணம்– சூடாமணி நிகண்டு, நன்னூல்
  இலக்கியம் – திருக்குறள், கொன்றைவேந்தன்
- சி.வை. தாமோதரம்பிள்ளை

பதிப்பித்த நூல்கள்: கலித்தொகை, தொல்காப்பியம், வீரசோழியம்

இலக்கணம்: தொல்காப்பியம், வீரசோழியம்

இலக்கியம்: கலித்தொகை

- ஏனைய முக்கியமான பதிப்பாசிரியர்கள்:

 வல்வை ச. வயித்திலிங்கப்பிள்ளை, வித்துவசிரோமணி பொன்னம்பலபிள்ளை, ச.தம்பிமுத்துப்பிள்ளை, மு.கார்த்திகேய ஐயர், சதாசிவ ஐயர், கணேசையர்

**(05 புள்ளிகள்)**

**(இ)**

**பத்திரிகை**

- ஈழத்தில் தமிழ்ப் பத்திரிகைகளின் தோற்றப் பின்புலம்
- அறிவுப் பரவலாக்கத்திலும் அடையாள உருவாக்கத்திலும் பத்திரிகைகளின் பங்களிப்பு
- சமயச் சீர்திருத்தமும் பத்திரிகைகளும்
- அரசியல் விடுதலைச் செயற்பாடுகளும் பத்திரிகைகளும்
- முக்கியமான பத்திரிகைகள் : உதயதாரகை, இந்துசாதனம், முஸ்லிம்நேசன், இலங்கைநேசன், சத்தியவேத பாதுகாவலன், சைவ உதயபானு, விஞ்ஞான வர்த்தினி, சன்மார்க்க போதினி, உதயாதித்தன்
- முக்கியமான பத்திரிகை ஆசிரியர்கள்

 கதிரைவேற்பிள்ளை, சைமன் காசிச்செட்டி, ஆர்னல்ட் சதாசிவம்பிள்ளை, எம்.சி.சித்திலெப்பை, கைலாசபிள்ளை, சரவணமுத்துப்பிள்ளை

**(05 புள்ளிகள்)**

[05 x 3 = 15 **புள்ளிகள்**]

**7.** பின்வருவோரில் யாரேனும் **இருவர்** தமிழ் ஆய்வு வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்பினை மதிப்பிடுக.

(அ) சுவாமி விபுலாநந்தர்

(ஆ) பேராசிரியர் க. கணபதிப்பிள்ளை

(இ) பேராசிரியர். க. கைலாசபதி

(ஈ) பேராசிரியர் ம. மு. உவைஸ் (15 புள்ளிகள்)

**( அ )**

**சுவாமி விபுலாநந்தர்**

- இசை பற்றிய ஆய்வுகள் : யாழ்நூல்
- ஒப்பியலாய்வு– யவனபுரத்து கலைச் செல்வம், ஆங்கிலவாணி
- தமிழிலக்கிய வரலாற்று ஆய்வு: The Origin and growth of Tamil Literature
- மொழியியல் ஆய்வு: சோழமண்டலத்து தமிழும் ஈழமண்டலத் தமிழும்
- கலைச்சொல்லாக்க முயற்சிகள் (1938 இல் கலைச்சொல் அகராதி பதிப்பு, கலைச்சொல்லாக்கம் – கட்டுரை)

**(07 1/2 புள்ளிகள்)**

**(ஆ)**

**பேராசிரியர் க.கணபதிப்பிள்ளை**

- கல்வெட்டியலாய்வு
- கல்வெட்டாய்வுகளுக்கு ஊக்கமளித்தமை
- மொழியியல் ஆய்வுகள் : சாசனங்களின் மொழி குறித்த ஆய்வுகள்
- அகராதிகள் குறித்த ஆய்வு : விஞ்ஞானமும் அகராதியும்
- பண்பாட்டியல் ஆய்வுகள்: ஈழத்து வாழ்வும் வளமும்

**(07 1/2 புள்ளிகள்)**

**(இ)**

**பேராசிரியர் க.கைலாசபதி**

- பண்டைத் தமிழ் இலக்கியங்கள் குறித்த ஆய்வுகள் : பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், அடியும் முடியும்
- ஒப்பியலாய்வு : ஒப்பியல் இலக்கியம், இரு மகாகவிகள், தமிழில் வீரநிலைக் கவிதை
- நவீன இலக்கிய ஆய்வுகள் : நவீன இலக்கியத்தின் அடிப்படைகள், தமிழ் நாவல் இலக்கியம், இலக்கியச் சிந்தனைகள், பாரதி ஆய்வுகள்
- இலங்கைத் தமிழ் இலக்கிய ஆய்வுகள் : ஈழத்து இலக்கிய முன்னோடிகள்
- இலக்கியத் திறனாய்வு : இலக்கியமும் திறனாய்வும், திறனாய்வுப் பிரச்சினைகள், கவிதைநயம் (முருகையனுடன் இணைந்து), இலக்கியமும் சமூகவியலும்

**(07 1/2 புள்ளிகள்)**

**(ஈ)**

**பேராசிரியர் ம.மு.உவைஸ்**

- இஸ்லாமிய தமிழ் இலக்கிய ஆய்வுகள் : தமிழ் இலக்கியத்துக்கு முஸ்லிம்களின் பங்களிப்பு, இஸ்லாமிய தமிழ்க் காப்பியங்கள், தமிழ் இலக்கிய அரபுச்சொல் அகராதி
- இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு – ஆறு தொகுதிகள் (அஜ்மல்கானுடன் இணைந்து)
- இஸ்லாம் வளர்த்த தமிழ்
- பதிப்புப்பணி : மதுரைத் தமிழ்ச் சங்கத்து புலவராற்றுப்படை, ஆசாரக்கோவை, திருமக்காக்கோவை
- மொழியியல் ஆய்வு: The spoken dialects of the Muslims of Sri Lanka

**(07 1/2 புள்ளிகள்)**

[ 07 1/2 + 07 1/2 = 15 **புள்ளிகள்**]

**8.** (அ) (i) பின்வரும் வாக்கியத்திலுள்ள பொருள் மயக்கத்தை இனங்கண்டு விளக்குக.
ஆங்கிலேயர் வருகையினால் வளர்ச்சி குன்றியிருந்த உள்ளூர்க் கலாசாரம் ஊக்கம் பெற்றது.

(ii) பின்வரும் வாக்கியத்திலுள்ள வழுவைச் சுட்டிக்காட்டி, வழுவற்ற வகையில் வாக்கியத்தைத் திருத்தி எழுதுக.
மாதவி வேத்தியல், பொதுவியல் என்ற இரு மரபுகளையும் சமூகத்தின் உயர்க்குழாத்தினருக்கு ஆடிக்காட்டிய காலத்திலேதான் இடையர் மத்தியில் ஆய்ச்சியர் குரவையும் குறவர் மத்தியில் குன்றக்குரவையும் இருந்துள்ளது.

(iii) பின்வரும் வாக்கியத்தில் உள்ள விடயங்கள் யாவும் ஒரே வாக்கிய அமைப்பில் வரத்தக்க வகையில் எழுதுக.

- சிலப்பதிகாரத்தை இளங்கோவடிகள் இயற்றியுள்ளார்.
- சிலப்பதிகாரமே தமிழில் தோன்றிய முதலாவது காப்பியமாகும்.
- ஒரு பெண்ணைத் தலைமைப்பாத்திரமாகக் கொண்டது என்ற சிறப்பு சிலப்பதிகாரத்துக்கு உண்டு.

(iv) பின்வரும் வாக்கியத்தை செய்வினை வாக்கியமாக மாற்றி எழுதுக.
சங்ககாலம் எனக் குறிப்பிடும் காலத்தில் தோன்றிய தனிப்பாடல்கள் பிற்காலத்தில் அவற்றின் பொருள், யாப்பு, அடியெண்ணிக்கை எனபவற்றின் அடிப்படையில் வகுக்கப்பட்டு அகநானூறு, புறநானூறு முதலான நூல்களாகத் தொகுக்கப்பட்டன.

(v) பின்வரும் சொற்களை அவற்றில் இடம்பெற்றுள்ள எழுத்துப் பிழைகளைத் திருத்தி சரியான முறையில் எழுதுக.

- சுயேட்சை வேட்பாளர்
- வித்துவசிரோண்மணி (10 புள்ளிகள்)

(ஆ) பின்வருவனவற்றுள் ஏதேனும் **ஒன்றினைப் பற்றிச்** சிறுகுறிப்பு வரைக.
(i) வினைச்சொல்லின் அடிப்படைப் பண்புகள்
(ii) மூவிடப் பெயர்கள்
(iii) வேற்றுமைப் புணர்ச்சியும் அல்வழிப் புணர்ச்சியும் (05 புள்ளிகள்)
(10 + 05 = 15 புள்ளிகள்)

**(அ)**

(i) உள்ளூர்க் கலாசாரம் ஆங்கிலேயர் வருகையினால் வளர்ச்சி குன்றி இருந்ததா, அல்லது வளர்ச்சி குன்றி இருந்த உள்ளூர்க் கலாசாரம் ஆங்கிலேயர் வருகையினால் ஊக்கம் பெற்றதா என்பது பொருள் மயக்கம்.

(ii) எண் வழு காணப்படுகின்றது. மாதவி வேத்தியல், பொதுவியல் என்ற இரு மரபுகளையும் சமூகத்தின் உயர் குழாத்தினருக்கு ஆடிக்காட்டிய காலத்திலேதான் இடையர் மத்தியில் ஆய்ச்சியர் குரவையும் குறவர் மத்தியில் குன்றக்குரவையும் இருந்துள்ளன.

(iii) தமிழில் தோன்றிய முதலாவது காப்பியமும் இளங்கோவடிகளால் இயற்றப்பட்டதுமான சிலப்பதிகாரம், ஒரு பெண்ணைத் தலைமைப் பாத்திரமாகக் கொண்டது என்ற சிறப்புப் பெற்றது.

அல்லது

தமிழில் தோன்றிய முதலாவது காப்பியமான இளங்கோவடிகளால் இயற்றப்பட்ட சிலப்பதிகாரம், ஒரு பெண்ணைத் தலைமைப் பாத்திரமாகக் கொண்டது என்ற சிறப்பினை உடையது.

அல்லது

இளங்கோவடிகள் இயற்றியதும் தமிழில் தோன்றிய முதலாவது காப்பியமுமாகிய சிலப்பதிகாரம் ஒரு பெண்ணைத் தலைமைப் பாத்திரமாகக் கொண்ட சிறப்புக்குரியது.

அல்லது

ஒரு பெண்ணைத் தலைமைப் பாத்திரமாகக் கொண்டது என்ற சிறப்புப் பெற்ற சிலப்பதிகாரம் தமிழில் முதலில் தோன்றிய முதலாவது காப்பியமும் இளங்கோவடிகளால் இயற்றப்பட்டதுமாகும்.

(iv) சங்ககாலம் எனக் குறிப்பிடும் காலத்தில் தோன்றிய தனிப்பாடல்களை பிற்காலத்தில் அவற்றின் பொருள், யாப்பு, அடியெண்ணிக்கை என்பவற்றின் அடிப்படையில் வகுத்து அகநானூறு, புறநானூறு முதலான நூல்களாகத் தொகுத்தனர்.

(v) – சுயேச்சை வேட்பாளர்

– வித்துவசிரோமணி

**(02 x 5 = 10 புள்ளிகள்)**

**( ஆ )**

(i) வினைச்சொல்லின் அடிப்படைப் பண்புகள்:

- செயலை உணர்த்தல்
- வேற்றுமை ஏற்காமை
- திணை, பால், எண், இடம் என்பவற்றை உணர்த்தல்
- காலத்தை உணர்த்தல் (வெளிப்படையாகவோ குறிப்பாகவோ)
- வினையடைகளைப் பெற்று வருதல்
- ஏவல் பொருளில் வருதல்

(ii) மூவிடப் பெயர்கள்

- தன்மை, முன்னிலை, படர்க்கைப் பெயர்கள் மூவிடப் பெயர்களாகும்.
- பேசுவோரைச் சுட்டும் பெயர் தன்மைப் பெயர்.

| தன்மை ஒருமை | தன்மைப் பன்மை |
|---|---|
| நான் | நாம், நாங்கள் |

- உளப்பாட்டுத் தன்மைப் பன்மை (நாம்)
- உளப்படுத்தாத் தன்மைப் பன்மை (நாங்கள்)
- கேட்போரைச் சுட்டும் பெயர் முன்னிலைப் பெயர்.

| முன்னிலை ஒருமை | முன்னிலைப் பன்மை |
|---|---|
| நீ, நீர் | நீங்கள் |

நீங்கள் மரியாதை ஒருமையாகவும் வழங்குகின்றது. நீவிர்,நீயிர்,எல்லீர் ஆகிய சொற்கள் இன்று வழக்கில் இல்லை.

- பேசப்படுவதை அல்லது பேசப்படுவோரை சுட்டும் பெயர் படர்க்கைப் பெயர்.

அ, இ ஆகிய சுட்டு அடியாகப் பிறக்கின்றன.

தன்மை, முன்னிலைப் பெயர்களில் திணை,பால் வேறுபாடு இல்லை. படர்க்கைப் பெயர்களில் உண்டு

| அண்மை | சேய்மை |
|---|---|
| இவன் | அவன் |
| இவள் | அவள் |
| இவர் | அவர் |
| இவர்கள் | அவர்கள் |

| | |
|---|---|
| இது | அது |
| இவை | அவை |

தன்மை, முன்னிலைப் பெயர்கள் வேற்றுமை ஏற்கும்போது வடிவம் மாறும்.

எ-டு : நான் + ஐ - என்னை
நீ + ஆல் - உன்னால்

(iii) வேற்றுமைப் புணர்ச்சியும் அல்வழிப் புணர்ச்சியும்

எழுவாய்த்தொடர், விளித்தொடர் தவிர்ந்த ஏனைய வேற்றுமைத் தொடர்களில் ஐ, ஆல், கு, இன், அது, கண் முதலிய வேற்றுமை உருபுகள் வெளிப்பட்டும், மறைந்தும் வர சொற்கள் புணர்வது வேற்றுமைப் புணர்ச்சி. வேற்றுமைப் புணர்ச்சி தவிர்ந்த ஏனைய எல்லா வகைப் புணர்ச்சிகளும் அல்வழிப் புணர்ச்சி.

எ-டு :

வேற்றுமைப் புணர்ச்சி
- மரத்தைத் தறித்தான் / மரம் தறித்தான்
- வீட்டுக் கதவு
- அவனுக்குக் கொடுத்தான்

அல்வழிப் புணர்ச்சி
- குருவி பறந்தது
- நெஞ்சே நினை

**(05 புள்ளிகள்)**

[10 + 05 = 15 **புள்ளிகள்**]

